25th September 1961]

THE HON. SRI M. A. MANICKAVELU : The proposal is to transfer an extent of 30·60 acres from grazing ground poramboke to village-side poramboke and give house-sites to the houseless at the rate of 5 per cents per family.

*Flood Relief Works—Government officials*

* 1798 Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of Sri M. P. SARATHI) : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தமிழ்நாட்டில் இப்போது ஏற்பட்ட வெள்ளத்தின் நிவாரண வேலைகளில் ஈடுபட்டிருந்த அரசாங்க ஊழியர்கள் எவரேனும் உயிர் இழந்தனரா ?

(இ) எந்த இலாகாவைச் சேர்ந்தவர்கள் ? எத்தனை பேர் ?

(உ) அவர்கள் குடும்பத்திற்கு அரசாங்கம் என்ன நஷ்ட ஈடு கொடுத்துள்ளனர் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) No. Sir.
(இ) & (உ) Do not arise.

*Local Fund Hospital (Pennadam)*

* 1799 Q.—SRI A. GOVINDASAMY (on behalf of SRI M. SELVARAJ): கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

விருத்தாசலம் தாலூக்கா பெண்ணாடம் லோகல் பண்ட் ஆஸ்பத்திரியை சர்க்கார் எடுத்துக்கொள்ள உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

SRI A. GOVINDASAMY : ஜில்லா போர்டு நிர்வாகத்தில் உள்ள ஆஸ்பத்திரிகளில் டாக்டர் இருந்தால் மருந்து இருப்பதில்லை, மருந்து இருந்தால் டாக்டர் இருப்பதில்லை என்ற நிலை இருக்கிறது. அதை மாற்றுவதற்காக பெண்ணாடத்திலுள்ள லோகல் பண்டு ஆஸ்பத்திரியை சர்க்கார் ஆஸ்பத்திரியாக மாற்றுவது பற்றி அரசாங்கம் மீண்டும் ஆலோசிக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : புதிய பஞ்சாயத்துச் சட்டப் பிரகாரம், படுக்கையில்லாத ஆஸ்பத்திரி அல்லது டிஸ்பென்ஸரி எல்லாம் பஞ்சாயத்து யூனியனுடைய பொறுப்பில் வந்துவிடுகிறது. படுக்கை இருந்தால், அதை அரசாங்கம் எடுத்துக்கொள்ளும். இதிலே அம்மாதிரி படுக்கை இருக்கிறதாகத் தெரியவில்லை. அதோடு, அரசாங்கம் எந்த ஆஸ்பத்திரியை எடுத்துக்கொள்வதாக இருந்தாலும், பொதுமக்களுடைய சகாயம் இருந்தால் முதலில் அதை எடுத்துக்கொள்கிறது. அந்த அடிப்படையில்தான் ஆம்பூரில் உள்ளதை எடுத்துக்கொண்டோம். பொதுமக்களுடைய சகாயம் இல்லாவிட்டால், மிச்சம் இருந்தால் அப்பொழுது கவனிக்கிறோம்.

*Government Hospital, Vellore—Death of Patrent in*

* 1800 Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI P. U. SHANMUGAM) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether it is a fact that the wife of a Government Official admitted for confinment in the Government Hospital at Vellore during the last week of May 1961, died in the Hospital; and